சொல்லிவிட்டுத் தம் கத்தியால் தமது நண்பரைக் குத்திக் கொன்ருர். குடி மயக்கம் தீர்ந்ததும் தம் அருமை நண்பரைத் தாமே கொன்றமைக்கு வருந்தினர். அதன் காரணமாக மூன்று நாள் இவர் ஊண் உறக்க மின்றிப் பரிதபித்தார். இச் செயலுக்குப் பின் இவருடைய உத்தியோகஸ்தர்கள் எல்லாம் இவருடைய குணம் வர வர மாறிக்கொண்டே வருவதைக் கண்டு தமக்கு எச் சந்தர்ப்பத்தில் இவரால் மரணம் சம்பவிக் குமோ என்று கவலைப்பட்டுக் கொண்டிருந்தனர்.

* * *

ஒரு நாள் அலெக்ஜாந்தர் ஒரு துறவியைக் கண்டார். அத் துறவியார் "வேண்டாமை யன்ன விழுச் செல்வம் ஈண் டில்லை" என்றபடி ஆசாபாசங்களை ஒழித்தவராக ஒரு சிறு குடிசையில் இருந்துகொண்டு காலந் தள்ளுகின்ற இயல் புடையவர். அவருடைய எளிய வாழ்க்கையைக் கண்ட அலெக்ஜாந்தர் சந்தோஷங்கொண்டு அவரைப் பார்த்து, "உமக்கு வேண்டிய ஒரு வரத்தை நீர் என்னிடமிருந்து பெற்றுக் கொள்ளும், நான்தான் மகா வீரனுகிய அலெக் ஜாந்தர்" என்ருர். அதற்கு அத் துறவியார் இவரைப் பார்த்து, "நீர் எவராகத்தான் இருந்தால் என்ன? உம்மால் இந்தச் சூரிய வெளிச்சத்தைக் கொடுக்க முடியாது. இதை மறைக்காமல் சற்று விலகி நில்லும்" என்று அலட்சியமாகப் பதில் கூறினர். இதனைக் கேட்ட அலெக்ஜாந்தர், "நான் அலெக்ஜாந்தராய்ப் பிறந்திராவிட்டால் இத் துறவியின் வாழ்க்கையைக் கொண்டிருப்பேன்" என்று அருகில் இருந் தவர்களிடம் கூறினராம்.

அலெக்ஜாந்தர் ஜயித்த நாடுகளில் ஒன்றில் கொள்ளைக் கூட்டத்தாரின் உபத்திரவம் அதிகமாக இருந்து வந்தது. கிரேக்கர்கள் சிரமப்பட்டு அந்தக் கொள்ளைக் கூட்டத்தாரைப் பிடித்துவிட்டனர். பிறகு அவர்கள் கள்வர் தலைவனை அலெக்ஜாந்தர்முன் கொண்டுவந்து நிறுத்தினார்கள். "நீ கொள்ளை அடித்துவருவது தகுமா?" என்று மன்னர் அவனைக் கேட்ட போது, அவன் தான் சிறியதொரு கூட்டத்தைக் கொண்டு சிலரைக் கொள்ளையடிப்பதாகவும், அலெக்ஜாந்தர் பெருஞ் சேனைகளைக் கொண்டு பல ராஜ்யங்களைக் கொள்ளையடித்து வருவதாகவும் கூறினான். இதனைக் கேட்ட அலெக்ஜாந்தர் அவனுடைய தைரியத்திற்கு மெச்சி அவனை உயர்ந்த பதவியில் வைத்ததாகத் தெரிகிறது.

மேற் கூறியவாறு இவரைப் பற்றி இன்னும் எத்தனையோ கதைகள் வழங்குகின்றன. இவற்றுள் சில உண்மையானவை என்று நிச்சயிப்பதற்கில்லை. ஆனால் அவை 'கலப்பற்ற பொய்' என்று மறுக்கவும் முடியாது. அக்காலத்தில் அலெக்ஜாந்தரைப் பற்றி எழுதி வந்தவர்களிற் பலர் மாசிடோனியாவின் விரோதிகள் ஆதல்பற்றி அவர்கள் எழுதியவை சிறந்த பிரமாணம் ஆகமாட்டா என்று பலர் நினைக்கின்றனர். இஃது எப்படி இருந்தாலும், பிற்காலத்தில் அலெக்ஜாந்தர் அதிகார வெறியினாலும் குடி வெறியினாலும் மயங்கி மமதை கொண்டிருந்தார் என்பது தெரிகிறது. அம் மமதையின் காரணமாக இவர் அநேக தவறுகள் செய்திருக்கிறார்.

—:(o):—

## XII

### முடிவுரை

ஒருவர் சரித்திரத்தைப் படிப்பதனால் அவரிடமுள்ள குண குணங்களை அறிந்துகொண்டு அவற்றுள் ஏற்றவற்றைக் கொண்டு ஏலாதனவற்றை மறந்து விட வாசக ளுடைய கடனாகும், அலெக்ஸாந்தர் ந்து அவருடைய குண குணங்கள் இன்னவை என்று இங்கே தொகுத்துக் கூறுவது மிகையாகாது.

இவர் மகா வீரர் என்ற பேர் படைத்தவர். இதிகாசத்திற் சொல்லப்படுகிற சூரராகிய அசிலிஸின் சந்ததியாராக இவர் கூறப்படுவர். உண்மையில் பிலிப்பும், அவரை விட அலெக்ஸாந்தரும் சிறந்த வீரர்களே. அஞ்சாமையும் தன்னுயிரைத் துரும்பாகக் கருதலும், முன்னணியில் நின்று கைகலந்து போராடுதலும், அங்ஙனம் போராடுகையில் சமஅந்தஸ்தும் சமபலமுமுள்ளவர்களுடன் போராடுவதும், தர்ம யுத்தத்திலேயே நாட்டமுள்ளவனாக இருத்தலும் ஒரு வீரனுக்குரிய இலட்சணங்களாகும். உத்தம வீரர்களுக்கு உரிய இந்த இலட்சணங்கள் யாவும் அலெக்ஸாந்தரிடம் அமைந்திருந்தன.

பா சிறுவராக இருக்கும் பொழுதே பல அருஞ் செயல்களைச் செய்திருக்கிறார். வேட்டையாடுவதில் இவர் திறமையைக்கண்டு பெரிய வீரர்களும் வியந்திருக்கின்றனர். சாதாரணமான வீரர்கள் விரும்புகின்ற ஒலிம்பிக் விளையாட்டுக்களை இவர் இலட்சியம் செய்யவில்லை. பிலிப்பினால் அடக்க முடியாத குதிரையை ா

அடக்கி யாண்டதும், ஒருமுறை அதைப் பார்த்ததிலிருந்து அது போருக்கு ஏற்றதொன்றென்று கண்டு கொண்டதும் இவருடைய போர் சம்பந்தமான இயற்கை யறிவையும் ஆற்றலையும் காட்டுகின்றன.

இன்ன சந்தர்ப்பத்தில் இன்ன முறைகளைக் கையாண்டு இவ்விதம் போர் செய்யவேண்டு மென்பதை இவர் நன்கு உணர்ந்திருந்தார். இஷ்யூ போருக்கு முன், கணவாயில் பாரசீகர்கள் அணிவகுத்து நின்ற அமைப்பைக் கண்டு அந் நிலையில் அவர்களைத்தம்மால் வெல்லமுடியாதென்பதை இவர் உணர்ந்து கொண்டு வேறு வழியாக நீண்ட தூரம் மலையைச் சுற்றிக்கொண்டு சென்றனர். அந்த அணிவகுப்புத் தமக்குச் சாதகமானது என்பது அன்று பாரசீகர்களுக்குத் தோன்றாமற் போயிற்று.

போர் முறைகளில் நல்ல பழக்கம் பெற்ற சிலர் அத் துறையில் பழக்கப்படாத பலரை எளிதில் வென்றுவிடலாம் என்பதை முதலில் உலகிற்குக் காட்டியவர் அலெக்ஜாந்தரே. கிரேஸ் படையெடுப்பின் போது அவர்கள் ரதங்களை உருட்டிக் கிரேக்க வீரர்களை நசுக்கிவிட முயன்றும், இவர் சமயத்துக்கேற்ற தந்திரத்தைக் கையாண்டது போற்றற்குரிய தொன்றும். ஏறமுடியாத மலைகளிற் புதிய படிகளை அமைத்துக்கொண்டு செல்வதும், கடக்க முடியாத ஆறுகளைச் சிறு படவுகளின் உதவியைக் கொண்டும் கூடாரங்களின் தோலைக்கொண்டும் கடந்து செல்வதும், தாண்ட முடியாத காடுகளை எளிதில் தாண்டிப்போவதும் சாமானிய வீரர்களால் சாத்தியப்படுகின்ற செயல்களை அல்ல.

தாம் தலைவர் என்பதையும் தம்முயிரைப் பாதுகாத்துக்கொண்டு காரியங்களை நடத்துதல் தம் வீரர்களைப் பாதுகாத்தலாகு மென்பதையும் இவர் மறந்து வீராவேசங் கொண்டு பகைவரின் மதிலின்மேல் ஏறுதல் முதலிய வீரச் செயல்களைச் செய்தமை இவருடைய அசகாய சூரத்தன்மையைக் காட்டுகின்றது. "நான் வெற்றியைத் திருடும் கள்வனல்லன்" என்று இவர் கூறிய வீரமொழி அதர்ம யுத்தத்தில் இவருக்கு இருந்த வெறுப்பைக் காட்டுமன்றோ? "புலமிக்கவரைப் புலமை தெரிதல் புலமிக் கவர்க்கே புலனாம்" என்றபடி சுத்த வீரர்கள் இன்னார்தாம் என்று அறிந்துகொள்ளுவதும் அவரைத் தக்கபடி நடத்துவதும் சுத்த வீரராகிய இவருக்கு இயற்கையாக அமைந்த குணங்களாம்.

உலக சஞ்சாரத்தால் ஒருவருக்குப் புத்தி விசாலப் படுகிறது. குறுகிய நோக்கம் எல்லாம் ஒழிகின்றன. பல இடங்களில், ஆங்காங்கு வாழ்ந்து வந்தவர்களுடைய பழக்கவழக்கங்களையும் கண்டதனால் அலெக்ஜாந்தர் விரிந்தநோக்கமுடையவராய் விளங்கினார். தம் காலத்துக் கிரேக்கர்கள் தம்மவரல்லாத வேறு ஜாதியர்களை எல்லாம் 'மிலேச்சர்கள்' என்று இழிவு படுத்திவர, இவர் 'மிலேச்சர்' என்று கருதப்பட்டவர்களிடம் தாராளமாய்ப் பழகி வந்தார். பாரசீக ஸ்திரீகளைத் தாம் மணந்துகொண்டமையும், தம் வீரர்களுக்கு மணஞ்செய்வித்தமையும், பாரசீகர், எகிப்தியர், யூதர் ஆகிய இவர்களின் கோவில்களுக்குத் தாம் சென்று வந்தமையும் பிறவும் இவருக்கு எம்மதமும் சம்மதமே என்பதைத் தெரிவிக்கின்றன.

அலெக்ஜாந்தரின் வியாபாரஞானம் உலகத்திற்கே புதிய உணர்ச்சியை யளித்தது. அலெக்ஜாந்திரியாவின் அமைப்

யைப் பற்றிய இவர் நினைப்பும், கடல் வழியாக வியாபாரம் நடத்த இவர் கொண்ட கனவும் பின்னர் உண்மையாயின.

பெண்கள் விஷயத்தில் இவர் மிகுந்த மரியாதையுள்ளவர். டரியஸின் குடும்பத்தார் விஷயத்தில் இவர் நடந்து கொண்ட விதம் போற்றத் தகுந்த தொன்றும். கீழ் நாட்டுப் பெண்களின் அழகு எத்தகையவரையும் அடிமைப் படுத்துவதா யிருக்க, அந் நாட்டிலேயே சர்வாதிகாரியா யிருந்த இவர் தூய வாழ்வை மேற்கொண்டு ஒழுகி வந்தார்.

அலெக்ஜாந்தர் தம் மனதிற்குச் சரியென்று தோன்றிய காரியங்களையே செய்வார். செய்யும்வேலையையும் தீர முன்னதாக யோசித்துக் கொண்டே அக் காரியத்தில் இறங்குவார். யோசனை கூறுகின்றவர்கள் தம் தாயாராயினும், ஆசிரியராயினும், அரும் பெறல் நண்பராயினும் அவர்கள் யோசனைகள் தம் மனச் சான்றைப் பங்கப்படுத்துவதாயின் இவர் அவற்றை ஏற்றுக்கொள்ள மாட்டார். தாம் பாரசீகத்தில் இருந்த காலத்தில் ஒரு முறை இவருடைய தாயார் ஆண்டிபேடர்மேல் சில குறைகளைச் சுமத்தி அவற்றை இவருக்குத் தெரிவித்திருந்தார். அதைக் கண்ட அலெக்ஜாந்தர் பொறுப்பை வகிக்கும் தலைவர்களுக்கு இத்தகைய அபவாதங்கள் நேருவது இயற்கையே என்றெண்ணித் தம் அருமைத் தாயார் எழுதிய குறைகளைக் குறைகளாகக் கருதவில்லை. பல பரிசுகள் அனுப்பி அவரை வேறுவழியாக இவர் திருப்தி செய்தார். கிரேக்க ரல்லாத அந்நியர் மிலேச்சர் என்ற தம் ஆசிரியரின் கொள்கைக்கு விரோதமாகவே இவர் நடந்து கொண்டார். "டரியஸ் அனுப்பிய தூதர் கூறுவது போல் நடப்பது நலம்" என்று கூறிய பர்மீனியோவின் மொழியையும் இவர் ஏற்றுக்கொள்ளவில்லை. இவ்விஷயங்களில் எல்

லாம் தம் மனச்சான்றையே பின்பற்றினர். உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுதல் இவர் கனவிலும் கருதாத விஷயமாகும்.

இரட்டையாட்சியைப் புகுத்தி வரி வசூலையும் ராணுவத்தையும் ஒருவர் கையிலும், நியாய விசாரணை முதலிய பிற வற்றை மற்றொருவரிடத்திலும் ஒப்புவிக்கும் முறையைக்கண்டறிந்ததும், அந்நியமதத்தினரை ஆள நேரும் காலங்களில் அவர்களுடைய மதவிஷயங்களில் அதிகார வர்க்கத்தார் பிரவேசித்தல் அந்த ராஜ்யத்திற்கு அழிவைத்தேடுவதாகுமென்ற இரகசியத்தைக் கண்டுகொண்டதும் இவருக்கிருந்த ராஜதந்திரத்தைக் காட்டுகின்றன.

"தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார் தோன்றலில் தோன்றாமை நன்று" என்பது இவருடைய அபிப்ராயம். ஒரு துறவியாரைக் குறித்து இவர், "நான் அலெக்ஜாந்தராய்ப் பிறந்திராவிடில் இவரைப்போல் வாழ விரும்புவேன்" என்று சொல்லியதிலிருந்து ஒருவன் லௌகிக விஷயத்தில் உயர்ந்த பதவியைப் பெறவேண்டும், இல்லாவிட்டால் உலகை வெறுத்துத் துறவு பூண்டு, "நாமார்க்கும் குடியல்லோம்' என்று இறுமாந்திருக்க வேண்டுமென்பது இவருடைய கொள்கை என்று ஊகிக்க இடமேற்படுகின்றது.

நாட்டுமொழி, நாட்டுக் கலைகள் முதலிய விஷயங்களில் இவருக்கு அளவற்ற மதிப்பு இருந்து வந்தது. இவர் தீபிஸ் நகரை அழிக்கையில் ஒரு கிரேக்கப் புலவரின் இல்லத்துக்கு அழிவு தேடாமலிருந்ததும் கிரேக்கக் கலைகளுக்குத் தாயக

மான ஆதன்னைப் பல முறை மன்னித்தமையும் ஈண்டு நோக்கத் தகுந்தவையாம்.

இவ்வாறு பல விதங்களில் மேன்மைக் குணம் வாய்ந்த ஒருவர் பிற்காலத்தில் மதுபானத்தால் மனிதத் தன்மையின் வரம்பு கடந்து தீயகாரியங்களைச் செய்தார் என்றால் அம்மது பானத்தின் தீமைதான் என்னே! இதனாலன்றோ மதுபானம் செய்வதைப் பெரியோர் பஞ்சமகா பாதகங்களுள் ஒன்றாக வைத்தார்! குடி மயக்கத்தில் அலெக்ஜாந்தர் எவ்வளவோ தீய காரியங்களைச் செய்துவிட்டபோதிலும் அவற்றிற்காக நாம் இவரை வெறுத்தல் தகாது. சந்திரனிற் களங்கமும், நெல்லில் உமியும், நீரில் நுரையும், ரோஜாவில் முள்ளும் இருக்கவில்லையா? அக் குறைகளின் பொருட்டு நாம் அவைகளை விலக்கி விட வில்லையே! அதுபோல் அலெக்ஜாந்தரிடத்துள்ள சில குற்றங்களை நாம் பாராட்டாது இவரிடத்தில் இருந்த பல சிறந்த குணங்களையே நாம் மதித்தல் வேண்டும்.

“குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்.”

முற்றிற்று.

PRINTED AT THE "ANANDA BODHINI" PRESS, MADRAS.

## பாடசாலைக்குரிய தமிழ்ப் புத்தகங்கள்.

(துரைத்தனத்தாரால் அங்கீகரிக்கப்பட்டவை)

——:(0):——

| | | ரூ. | அ. | ப |
|---|---|---|---|---|
| 1. மாணவர் தமிழ் வாசகம் | (முதற் பாடம்) | 0 | 2 | 0 |
| 2. ,, ,, | (இரண்டாம் ,, | 0 | 3 | 0 |
| 3. ,, ,, | (மூன்றாம் ,, | 0 | 4 | 0 |
| 4. ,, ,, | (நான்காம் ,, | 0 | 5 | 0 |
| 5. ,, ,, | (ஐந்தாம் ,, | 0 | 6 | 0 |
| 6. ,, ,, | (ஆறாம் ,, | 0 | 7 | 0 |
| 7. ,, ,, | (ஏழாம் ,, | 0 | 8 | 0 |
| தமிழ் இலக்கிய இலகு போதம் 5-ம் வகுப்புக்கு | | 0 | 3 | 0 |
| இளைஞர் இந்திய சரித்திரக் கதைகள் 5-ம் ,, | | 0 | 4 | 0 |
| சிவிக்ஸ் என்னும் சிறுவர் துரைத்தனமுறை முதற் புத்தகம் | | 0 | 5 | 0 |
| ஷை இரண்டாம் புத்தகம் | | 0 | 6 | 0 |

மனங்கலங்கினாள். மணிமேகலையைச் சிறையினின்றும் விடுவிக்க வேண்டுமென்று எண்ணி இராசமாதேவியின் கோயிலை அடைந்து அவளைக் கண்டு வணங்கினாள். சித்திராபதி அவளை நோக்கி, "மன்னவன் மாபெருந்தேவியே! கோவலன் மாண்ட கொடுந்துயர் கேட்டு மாதவி, தனது பரத்தைமைத் தொழிலை நீக்கி அறவோர் பள்ளியைச் சேர்ந்ததும், அவள் மகளாகிய மணிமேகலை, ஐயக்கலனேந்தி மனைதோறுஞ் சென்று பிச்சை எடுத்ததும், யாவரும் கேட்டுப் பரிகசித்து நகைப்பதற்கே இடமாயின. அன்றியும் உதயகுமரன் இறந்ததோடல்லாமல் மணிமேகலையால் இன்னும் இந்நகரத்திற்கு உண்டாகும் பெருந் துன்பமும் ஒன்றுண்டு. அதனைக் கேட்பாயாக" என்று கூறத் தொடங்கினாள்:

முன்னொருநாள் நெடுமுடிக்கிள்ளி என்னும் மன்னவன் தானே தமியனாய் இந்நகர்க் கடற்கரையில் உள்ள புன்னைமரச் சோலையில் உலவிக்கொண்டிருந்தான். அப்பொழுது அங்கே தோன்றிய பேரழகுள்ள ஒரு மங்கையைக் கண்டு காதல்கொண்டு அவள் வரலாற்றை அறியாமல் அவளோடு கூடி ஒருமாதம் வரையில் அச் சோலையிலேயே வாழ்ந்தான். அம் மங்கையும் கருவுற்றாள்.

ஒருநாள் அவள் மன்னனுக்குத் தெரியாமல் தனது உறைவிடத்திற்குச் சென்றுவிட்டாள். அரசன் அவளைக் காணாமல், "இளங்கொடி எங்கொளித்தனள்" என்று பல விடங்களிலும் தேடிக்கொண்டிருந்தான். அப்பொழுது அற்புத ஆற்றல் படைத்த சாரணன் ஒருவன் வந்தான். அரசன் அவனைக் கண்டு வணங்கி "என்னுயிர் அனையாள் ஒருத்தி இங்கு ஒளித்தாள். அவளைக் கண்டதுண்டோ" என்று கேட்டான். அவன், "அரசனே! அம்மங்கையை இப்பொழுது நான் பார்க்கவில்லை. ஆயினும் அவளை முன்பே நான் அறி

வேன். அவன் நாக நாட்டு மன்னவனாகிய வளைவணன் என்பவன் மனைவி வாசமயிலை என்பவள் வயிற்றில் பிறந்தவள். அவள் பெயர் பீலிவளையென்பது. அவள் பிறந்தநாளில், "இவள் சூரிய குலத்து மன்னவன் ஒருவனைச் சேர்ந்து கருவுற்றுவருவாள்" என்று சோதிடன் கூறினான். இது முன்பு நடந்த செய்தி. ஆதலால் அவள் பெற்ற மகன் உன்னிடத்தில் வருவானேயன்றி அவள் இனி உன்னிடத்திற்கு வரமாட்டாள். ஆதலால் உன் மனத் துயரம் ஒழிவாயாக. மற்றொரு செய்தி கேட்பாயாக! மணிமேகலா தெய்வத்தின் சொல்லாலும், இந்திரனுடைய சாபத்தினாலும், இந்திரவிழாச் செய்யாவிட்டால் உன் நகரத்தைக் கடல் கொள்ளுவது உண்மை. ஆதலால் ஒவ்வோராண்டும் தவறாமல் இந்திரவிழாச் செய்து வருக" என்று கூறிச் சென்றான்.

அன்று தொடங்கி இந்நகரத்தார் அனைவரும், "எப்பொழுது நமது நகரத்திற்கு ஆபத்து வருமோ"வென அஞ்சிக்கொண்டிருக்கின்றனர். நானும், "தன்னுடைய பெயரைப் பெற்ற பெண் அடைகின்ற துன்பத்தை நீக்குவதற்கு மணிமேகலா தெய்வம் வருமே" என்று அஞ்சிக்கொண்டிருக்கின்றேன். ஆதலால் நன் மனம் பெற்ற மணிமேகலையை என் மனைக்கு அனுப்பிவிடுக" என்று சித்திராபதி கூறினாள். அதற்கு இராசமாதேவி "அறிவுடையவர்களால் வெறுக்கப்பட்ட கள், பொய், காமம், கொலை, களவு இவற்றையே வாழ்க்கைத்துணையாகக் கொண்ட உனது வாழ்க்கை அசுத்தம் உடையதென்று அஞ்சி நீங்கிவந்த மணிமேகலை உன்னுடன் வந்து உன் மனையில் வாழ்வதற்குத் தகுதியுடையவள் அல்லள். இவள் என்னுடைய மனையில் என்னிடத்திலேயே இருக்கட்டும்" என்று சொல்லிக்கொண்டிருந்தாள்.

இவ்வமயத்தில், மணிமேகலையின் செய்தியை அறிந்த தவி அதனைச் சுதமதிக்குக் கூறி வருந்தி அறவண அடிகளிடஞ் சென்று வணங்கி நடந்தவற்றை அறிவித்தாள். உடனே அறவண அடிகள் மாதவி, சுதமதி இருவருடனுங் கூடி இராசமாதேவியின் இருப்பிடத்தை அடைந்தார். அவருடைய வருகையை அரசன் தேவியும், தோழிமார்களும், சித்திராபதியும், மணிமேகலையும் கண்டு வணங்கினர். அறவண அடிகள் தனது பாதங்களை வணங்கிய இராசமா தேவிக்கு "அறிவுண்டாக" என்று வாழ்த்துக் கூறினர். உடனே இராசமாதேவி அவரை ஓர் உயரிய ஆசனத்தில் அமரச்செய்து வணங்கி, "வயது முதிர்ந்த நுமது இரண்டு பாதங்களும் வருந்துமாறு என்னிடம் வந்தது, நான் செய்த நல்வினையின் பயனேயாகும்" எனக் கூறித் துதித்தாள்.

அப்பொழுது அறவண அடிகள், அவளுக்குத் தருமங்களைப் போதித்து, "நீவிர் எப்பொழுதும் நல்லறங்களையே கேட்டு நல்வழியில் நடப்பீராக" என்று கூறி மணிமேகலையை நோக்கி "நீ மற்றய சமயக் கொள்கைகளை எல்லாம் அறிந்து வந்தபின் பௌத்த சமயக் கொள்கைகளைப் பற்றி அறிவிக்கின்றேன்; நான் சென்று வருகிறேன்" என்று கூறித் தமது உறைவிடத்திற்குச் செல்ல எழுந்தார்.

அப்பொழுது மணிமேகலை எழுந்து அறவண அடிகளை வணங்கி இராசமாதேவி முதலியவர்களையும் பார்த்து "நீங்கள் அறவண அடிகள் கூறிய அறவுரைகளை மறவாதீர்கள். அவற்றின் வழியிலேயே ஒழுகுங்கள்! நான் இந்நகரத்தில் வாழ்வேனாயின் "இவள் அரச குமாரனைக் கொன்றவள்" என்று என்மீது பழிகூறுவர். ஆதலால் நான் ஆபுத்திரன் நாட்டிற்குச் சென்று, பிறகு மணிபல்லவத்தையடைந்து, புத்த பீடி

கையைத் தொழுது, மீண்டும் வஞ்சி நகரத்தையடைந்து, பத்தினிக்கடவுளாகிய கண்ணகியை வணங்கிப் பலவிடங்களுக்குஞ் சென்று நல்லறம் புரிந்துகொண் டிருப்பேன். எனக்குத் துன்பம் உண்டாகுமென்று எண்ணி நீங்கள் சிறிதும் வருந்த வேண்டாம். எனக்கு ஒரு துயரும் நேராது" என்று கூறிப் புறப்பட்டாள். உடனே அறவண அடிகளும் சென்று தமது பள்ளியை யடைந்தார்.

---

## 10. மணிமேகலை ஆபுத்திரனோடு மணிபல்லவம் அடைதல்.

மணிமேகலை, ஆதவன் குடபால் மறைந்த பிறகு அந்தி நேரத்தில் உலக அறவிக்குச் சென்று, சம்பாபதியையும், கந்திற்பாவையையும் வலங்கொண்டு வணங்கினாள். பின்னர் ஆகாயவழியே சென்று சாவகத்தீவை அடைந்து, இந்திரன் வழித்தோன்றலாகிய புண்ணிய ராசன் வாழ்கின்ற நாகபுரத்தின் ஒரு பக்கத்தில் உள்ள ஒரு சோலையில் தங்கிக் களைப்பாறினாள். அவள் அப்பொழிலில் வசிக்கும் தரும தத்தன் என்னும் முனிவனுடைய பாதங்களை வணங்கி, "இந்நகரத்தின் பெயர் யாது? இதை ஆளுகின்ற அரசன் யார்?" என்று உசாவினாள். அதற்கு அம்முனிவன் "இந்நகரத்தின் பெயர் நாகபுரம் என்பது. இதை ஆளுகின்ற மன்னவன், பூமிசந்திரன் மகனாகிய புண்ணிய ராசன் என்பவன். புண்ணியராசன் பிறந்த நாள் முதல் குறையாத மழை பெய்கின்றது. நிலமும், மரவகைகளும் மிகுந்த வளங்களைத் தருகின்றன. உயிர்களுக்கும் நோய்கள் உண்டாவதில்லை" என்று கூறினான்.

இச்சமயத்தில் அந்நகர மன்னவனாகிய புண்ணிய ராசன் அங்கு வந்து தருமதத்தனை வணங்கி, அறத்தின் தன்மை

மறத்தின் இயல், நிலையுள்ள பொருளின் பண்பு, நிலையற்ற பொருளின் குணம், புத்ததேவன் பெருமை முதலியவற்றைக் கேட்டுக்கொண்டிருந்தான். அப்பொழுது அவன் ஈடில்லா அழகுடைய ஒரு பெண், கையில் ஐயக்கலன் கொண்டு அங்கு வந்து நிற்பதைப் பார்த்து "இந் நங்கை யார்?" என்று கேட்டான். உடனே பக்கத்திலிருந்த கஞ்சுகன், அரசனை நோக்கி, "அரசே! இந் நங்கைக்கு ஈடானவர்கள் நாவலந்தீவில் யாவரும் இல்லை. முன்பு கிள்ளி வளவனுடைய நட்பைப் பெறும் பொருட்டுக் கலத்தின் வழியே காவிரிப்பூம் பட்டினத்திற்குச் சென்றிருந்தபோது அறவண அடிகள் இவள் பிறப்பை அறிந்து எனக்குக் கூறினார்' என்று அப்பொழுதே நான் உனக்குக் கூறி யிருக்கின்றேன். அவள் தான் இப் பெண்மணி. அக் காவிரிப்பூம்பட்டினத்தி லிருந்து இங்கு வந்திருக்கின்றாள்" என்று கூறினான்.

அப்பொழுது மணிமேகலை அவன்பால் அணுகி "உன் கையிலிருந்த பாத்திரந்தான் என் கையி லிருக்கின்றது. மிகப் பெருஞ் செல்வத்தால் மயங்கி அறியாமலிருக்கின்றாய். முன் பிறப்பை அறியவில்லையாயினும் ஆ வயிற்றில் பிறந்த இப் பிறப்பையும் அறியாதவனாய் என் செய்தனை? மணிபல்லவத் தீவை அடைந்து வலங்கொண்டு புத்த பீடிகையைப் பார்த்தால் அல்லாமல் பழம் பிறப்பின் தன்மையை அறியமாட்டாய். ஆதலால் நீ அங்கு வருக" என்று கூறி வெய்யவன் மேற்குத் திசையில் அடங்குவதற்கு முன்பே மணிமேகலை வான்வழியே மணிபல்லவத்தை அடைந்தாள்.

அத்தீவில் மலர்கள் நிறைந்து நறுமணம் வீசும் கடற்கரை எங்குஞ் சுற்றி, மணிபல்லவத்தை வலங்கொண்டு, புத்தபீடிகையை வணங்கினாள். மீண்டும் அது பழம்பிறப்பை உணர்த்திற்று. அப்பொழுது மணிமேகலை அப் பீடிகையைத்

தொழுது நின்று தான் முற்பிறப்பில் அறிந்த செய்தியைக் கூறுகின்றாள். "ஓ பிரம தரும முனிவரே! காயங்கரை என்னும், ஆற்றங் கரையில், அத்திபதி என்னும் அரசனுடன் வந்து உம்மைப் பணிந்து அவந்தி நகருக்குச் செல்வோர்க்கெல்லாம், "துன்புறுதற்குக் காரணமாகிய தீவினைகளைச் செய்வீர்களாயின் விலங்காகவும், நரகராகவும், பேயாகவும் பிறக்கவேண்டும். ஆதலால் அவற்றை ஒழிமின்! நல்வினைகளைப் புரிவீராயின் தேவராகவும், மக்களாகவும், பிரமராகவும் பிறப்பீர்கள். ஆதலால் அவற்றையே மறவாது செய்மின்! புலவனும், முற்றறிவுடையவனுமாகிய ஒருவன் உலகம் உய்யுமாறு பிறப்பான். அக்காலத்தில் அவன் கூறும் அறவுரைகளைக் கேட்டவர்கள்தான் துன்பமான பிறவியை நீக்குவார்கள். தடுப்பதற்கு முடியாத காலன் வருவதற்கு முன்னர் அற நெறியைக் கைக்கொள்ளுங்கள்!" என்று நாக்கடிப்பாக வாய்ப்பறை சாற்றினீர்! அவ்வுரை கேட்டு உமது பாதங்களை வணங்கிய எங்களுக்குக் கொடுமொழி கூறினீர்! புத்தர் தோன்றுவதற்கு முன்பே இப் பீடிகையை இந்திரன் வைத்த காரணமும், அப் பீடிகை என் பிறப்பை உணர்த்துவதற்குக் காரணமும் என்னவென்று கேட்டேன். அப் பீடிகை புத்த தேவனையல்லாமல் வேறொருவரைத் தன்மேல் சுமக்காது. அப் பீடிகை சுமந்தால்தான் புத்ததேவனை இந்திரன் வணங்குவான், ஆதலால் அவ்விந்திரன், அப் பீடிகையைப் புத்த தேவனுக்காக அமைத்து, அதனைக் காணுகின்ற பிறருடைய பழம் பிறப்பையும் அறிவிக்குமாறு கட்டளையிட்டான். அதன்படி அது உனது பழம் பிறப்பை விளக்கமாகக் காட்டும் என்று அப்பொழுது நீர் கூறினீர்! அது இப்பொழுது கூறியது போலத் தோன்றுகின்றது" என்று கூறி, மீண்டும் அப் புத்தபீடிகையை ஏத்தி வலங்கொண்டு வணங்கி நின்றாள்.

மணிபல்லவத் தீவில் மணிமேகலை இவ்வாறிருக்க, நாக புரத்தில், புண்ணியராசன் சோலையைவிட்டு நகரத்தை அடைந்து தன்னை வளர்த்த தாயாகிய அமர சுந்தரியின் மூலம், மண்முக முனிவன் தனக்குத் தந்தையாக இருந்ததையும், அம் மண்முக முனிவன் அருளால், குடலிற் பிறக்காமல், பொன் முட்டையின் வழியே பிறந்ததையும், பிள்ளையில்லாத பூமிசந்திரன் தன்னை மண்முக முனிவனிடம் கேட்டு வாங்கிக்கொண்டு வந்ததையுங் கேள்வியுற்ருன். கேள்வியுற்றதும் சென்ற பிறவியில் தன் தாயாகிய சாலி செய்தசெய்கையையும், இப் பிறவியின் தன்மையையும் நினைந்து வருந்தி, "இனி நான் இவ்வரச செல்வத்தில் வீற்றிருந்து அமைச்சர்களையும் புரோகிதர்களையும் துணையாகக் கொண்டும், பெண் மக்கள் செய்யும் பாடலோடு கூடிய ஆடல்களைக் கண்டும், இனிய இசைகளைச் செவிமடுத்தும் ஊடல்கொண்ட மனைவிமார்களின் ஊடலைத் தணித்து விளையாடியும் வாழமாட்டேன். துறவற நெறியிற் செல்லுதலே நன்று. தரும சாவகன் என் செவியில் விதைத்த அறவுரை இன்றுதான் மணிமேகலையால் விளைந்து பயன் தந்தது" என்று கூறினான்.

வ்வாறு மன்னன் கூறியதைக் கேட்ட சனமித்திரன் என்னும் அமைச்சன், புண்ணிய ராசனை வணங்கி, "அரசே! எனது சொல்லைச் சிறிது கேட்டருள்வாயாக! பூமிசந்திரன் உன்னை மகனாகப் பெறுவதன்முன் இந் நாடு பன்னீராண்டு மழையின்றி உயிர்கள்யாவும் துன்புற்றன. பெற்ற தாயார் குழந்தைகள்மீது இரக்கமின்றி வயிற்றுக் கொடுமையால் குழந்தைகளைத் தின்னக்கூடிய நிலைமையி லிருந்தனர். இந் நிலையில் வெயில் கொளுத்துகின்ற கடுங் கோடையில் தோன்றிய மழையைப்போல நீ தோன்றினை. நீ தோன்றியபின்னர் வானம் பொய்க்கவில்லை. மண்வளங் குன்றவில்லை. உயிர்கள்

யாவும் பசித்துயர் அறியவில்லை. ஆதலால் நீ சென்றால் நாடு முழுவதும் தாயிழந்த குழந்தையைப்போல் கூச்சலிடும். உனது நாட்டில் உள்ள உயிர்கள் யாவும் மரணம் அடையும் படி விட்டுவிட்டு நீ உயர்நிலையடைய விரும்புவையாயின், தன்னுயிரைப் பொருட்படுத்தாமல் பிறவுயிரைக் காப்பாற் றும் புத்ததேவனுடைய அறம் இஃதாகாது'' என்று கூறி னன். அதுகேட்ட மன்னவன், "நான் மணிபல்லவத்தை வலங்கொண்டு வரவேண்டும்'என்றுஎழுந்த ஆவல் தணியாது. ஆதலால் ஒரு மாதத்திற்கு அரசுரிமையை நீ கைக்கொண்டு ஆளுக; நான் சென்று வருகின்றேன்'' என்று கூறி அரசுரிமை யை அவனிடம் ஒப்புவித்து விட்டுக் கப்பல் தொழிலாளரை அழைத்துக் கப்பலைக் கொண்டுவரச் செய்து, அதில் ஏறி மணிபல்லவத் தீவை அடைந்தான்.

அங்கே புண்ணிய ராசனுடைய வருகையை எதிர்நோக் கிக்கொண்டிருந்த மணிமேகலை, கலத்தின்வழி வந்து இறங் கிய மன்னவனை அழைத்துச் சென்று, அத்தீவை வலஞ்செய் வித்துப் புத்தபீடிகையைக் காட்டினாள். மன்னவன் புத்த பீடிகையைக் கண்டு வணங்கியவுடன், கையிலெடுத்துக் காண்கின்றவர்களின் முகத்தைத் தெளிவாகக் காட்டுகின்ற கண்ணாடிபோல அது அவனுடைய பழம் பிறப்பை விளங்கச் செய்தது. உடனே அவன் 'என் பிறப்பை உணர்ந்தேன்; எனது துன்பந் தீர்ந்தேன்' என்று மொழிந்து "தென்தமிழ் மதுரையில் உள்ள செழுங்கலைப்பாவையே! இரந்துண்வாழ்க் கையையுடைய என்னிடத்திற்கு, மழைபெய்கின்ற நள்ளிரு ளில், வயிறு பசிக்கின்றதென்று கூறி உணவின் பொருட்டு என்னைத்தேடி வந்தவர்க்கு உணவிட வழியறியாமல் வருந்தி னேன். அப்பொழுது "ஆபுத்திரனே! வருந்தாதே! நா வறுமையடைந்தாலும், இவ்வோடு வறுமை யடையாது

என்று மொழிந்து என் கையில் அமுதசுரபியைக் கொடுத்து என் துன்பத்தை நீக்கிய வாஞோர்பாவையே! உன்னுடைய திருவடிகளை எத்தனை பிறவிகள் எடுக்கினும் மறந்து வாழ மாட்டேன்." எனப் பழம் பிறப்பில் நடந்த நிகழ்ச்சியைக் கூறித் துதித்தான். பிறகு மணிமேகலையுடன் கூடித் தென் மேற்காகச் சென்று, கோமுகியென்னும் பொய்கைக் கரையில் ஒரு புன்னை மரத்தின் நீழலில் தங்கி இருந்தான்.

அப்பொழுது, அத்தீவின் காவல் தெய்வமாகிய தீவ திலகை, ஆபுத்திரனும் மணிமேகலையும் வந்திருப்பதையறிந்து, அங்கு வந்து புண்ணிய ராசனை நோக்கி "ஆபுத்திரனே! முன்னுளில் நீ இத் தீவில் பட்டினி கிடந்து உயிர் விட்டவுடன், உன்னை மறந்துவிட்டுக் கப்பலேறிச்சென்ற ஒன்பது செட்டிகளும் மீண்டும் இங்குவந்து பார்த்தனர். நீ இறந்துகிடந்ததைக் கண்டு அவர்களும் மனம் வருந்தி நீ இறந்த இடத்திலேயே உண்ணு நோன்பிருந்து உயிர் துறந்தனர். இவைதான் அந்த ஒன்பது செட்டிகளுடைய உடல் எலும்புகள். அவர்களால் உணவு கொடுக்கப்பட்டு அவர்களுடன் வந்தவர்களும், இறந்தார்கள். அவர்களின் உடல் எலும்புகள் இவைகளாகும்; அலையினுல் கொண்டுவந்த மணலால் மூடப்பட்டு, இதோ இப் புன்னைமர நீழலில் உனது எலும்புக்கூடு இருக்கின்றது; காண்பாயாக!" என்று கூறிற்று.

## காவிரிப்பூம்பட்டினம் கடல்கொண்ட செய்தி.

பிறகு தீவதிலகை மணிமேகலையை நோக்கி, "காவிரிப் பூம் பட்டினத்தைக் கடல் கொண்டது. அதற்குக் காரணம் கேட்பாயாக. நாகநாட்டரசன் பெண்ணுகிய பீலிவளை என்பவள் தான் பெற்ற குழந்தையுடன் இத் தீவையும், புத்த பீடிகையையும் வலம்வந்து வணங்கினுள். அப்பொழுது

காவிரிப்பூம் பட்டினத்திற்குச் செல்லுகின்ற கம்பளச் செட்டியின் கப்பல் அத்தீவில் வந்து தங்கிற்று. பீலிவளை அவனிடஞ் சென்று, தனது மகனை, "இவன் சோழன் மகன், இவனை அவனிடஞ் சேர்த்துவிடுவாயாக" என்று சொல்லிக் கொடுத்தாள். அவனும் பெருமகிழ்ச்சியுடன் அம் மைந்தனை வாங்கிக்கொண்டு கப்பலேறிச் சென்றான். செல்லும்போது கப்பல் நடுக்கடலில் உடைந்துபோயிற்று. அக்கப்பலிலிருந்து தப்பிப் பிழைத்துக் காவிரிப்பூம் பட்டினத்தை அடைந்த சிலர் அரசனிடஞ் சென்று மைந்தனை இழந்த செய்தியைக் கூறினார்கள். அது கேட்ட கிள்ளிவளவன் மகனடைந்த தீமையை நினைந்து மனம்பொறாமல் கடற்கரையை அடைந்து மகனைத் தேடி அலைந்தான். இந் நிலையில், இந்திரவிழாச் செய்தலை நகரத்தார் மறந்தனர். மறக்கவே மணிமேகலாதெய்வம் "நகரைக் கடல் கொள்க" என்று சபித்ததனால் நகரைக் கடல் மூடியது. அரசன் வேறிடஞ் சென்றான். அறவண அடிகளோடு மாதவியும், சுதமதியும் வஞ்சிமாநகரத்தை அடைந்தார்கள்" என்று சொல்லிவிட்டுச் சென்றது.

பிறகு புண்ணியராசன், அத் தீவதிலகை காட்டிய இடத்தில் மணலைத் தோண்டிப் பார்த்தான். அங்கே தனது உடல் ஊண்பசையின்றி எலும்புக் கூடாகக் காணப்பட்டதைக் கண்டு மனங்கலங்கினான். அதுகண்ட மணிமேகலை அரசனை நோக்கி, "அரசே! ஏன் வருந்துகின்றனை? நான் உனது நாட்டிற்கு வந்து உன்னை இங்கு அழைத்துக்கொண்டு வந்தது, உனது பழம்பிறப்பை அறிவித்து, உனது புகழை உலகமுழுதும் பரவ வைப்பதற்கே யாகும். இனி நீ அறத்தையே மேற்கொண்டு வாழ்வாயாக. அறமெனப்படுவது யாதெனின்:—வறுமையில் வாடுவோர்க்கு உண்டியும் உடையும், உறையுளும் கொடுத்து உதவுவதேயாகும்" என்று கூறி

ளுள். அதற்கு அரசன் "என்னுடைய நாட்டிலும், பிறர் நாட்டிலும் நீ கூறிய நல்லறத்தையே செய்கின்றேன். என் பழம் பிறப்பை அறியச் செய்து என்னை உய்வித்த உன்னை விட்டுப் பிரிய நான் மனங்கொள்ள மாட்டேன்" என்று கூறினன். அதற்கு மணிமேகலை, "அரசே! நீ வருந்த வேண்டாம். நீ பிரிந்து வந்ததனால் உனது நாடு மிகவும் வருந்தி உன்னை வாய்கூவி அழைக்கின்றது. ஆதலால் உனது நாட்டிற்குச் செல்லுவாயாக" என்று கூறி அனுப்பிவிட்டு, அவள் அந்தரவழியே வஞ்சிமாநகருக்குப் புறப்பட்டாள்.

—

## 11. மணிமேகலை வஞ்சியை அடைந்து மதவாதிகளின், வாய்மொழி கேட்டல்.

மணிமேகலை வான்வழியே வஞ்சிமாநகரத்தின் அண்மையில் வந்து, குறையாத அன்புள்ள தாயாகிய கண்ணகியையும், கொடைத்தன்மையுள்ள தந்தையாகிய கோவலனையும் வணங்குதற்கு ஆவல் கொண்டாள். சேரன் செங்குட்டுவனால் இமய மலையிலிருந்து கல் கொணர்ந்து படிமஞ் செய்து வைத்திருக்கின்ற, கண்ணகியின் கோட்டத்தைக் குறுகி, வணங்கி நின்றாள், "தாயே! நீ, கோவலன் இறந்த உடன் அறக்கற்பாகிய, உடனிறத்தல், அல்லது தீப்பாய்தல், நற்றவஞ் செய்தல் ஆகிய இவற்றைச் செய்யாமல், மறக்கற்பை மேற்கொண்டு, வீரச் செய்கைகளைச் செய்ததற்குக் காரணம் யாதென்று விளக்கவில்லை அவற்றை அருள்செய்ய வேண்டும்" என்று கேட்டு நின்றாள்.

அப்பொழுது பத்தினிக் கடவுளாகிய கண்ணகி தோன்றி மகளே! "என்று காதலன் அடைந்த கடுந்துயரத்தை

பொறுக்க முடியாமல் மதுரையைத் தீக்கிரையாக்கத் துணிந்தேன். அப்பொழுது அந் நகரத் தெய்வமாகிய மதுராபதி என் முன்னே தோன்றிக் "கோவலனும் நீயும் இப்பிறப்பில் இத்துன்பத்தை அடைந்ததற்குக் காரணம் முற்பிறப்பில் செய்த தீவினையேயாகும். அத் தீவினையையும் கேட்பாயாக.

முன்பு கலிங்கநாட்டில் உள்ள சிங்கபுரத்து மன்னவனாகிய வசு என்பவனும், கபிலபுரத்து மன்னவனாகிய குமரன் என்பவனும் தம்முட் பகைவராகிப் போர் செய்துகொண்டிருந்தனர். அக்காலத்தில் சங்கமன் என்னும் ஒரு வணிகன் தன் மனைவியுடன் சிங்கபுரத்துக் கடைத்தெருவுக்குச் சென்று பண்டம் விற்றுக்கொண்டிருந்தான். அப்பொழுது அந் நகரத்து அரசனிடம் வேலை பார்த்துக்கொண்டிருந்த பரதன் என்பவன் அவ் வணிகன்பால் பொறாமையடைந்தான். அதனால் பரதன் அரசனிடஞ் சென்று, அவ் வணிகனைப் பகையரசனுடைய ஒற்றன் என்று கூறிக் கொலைசெய்வித்தான். கொலை செய்யப்பட்ட சங்கமனுடைய மனைவியாகிய நீலி என்பவள் அளவற்ற துன்பமடைந்து புலம்பி ஒரு பெரிய மலைமீதேறி நின்று "எமக்குத் துன்பஞ் செய்தவர் மறு பிறப்பில் இத்தகைய துன்பத்தையே அடைவாராக" என்று சபித்துவிட்டுக் கீழே விழுந்து இறந்தாள். அப் பரதனே இப்பொழுது கோவலனாகப் பிறந்து கொலையுண்டான். முற்பிறப்பில் செய்த தீவினையே உங்களை இப்பிறப்பில் இவ்வாறு துன்புறச் செய்தது" என்று கூறிற்று.

இவ்வாறு அத் தெய்வம் கூறியபிறகும் எனது கோபம் தணியாமையால், மதுரை நகரத்தைத் தீக்கிரையாக்கி அழித்தேன். முன் செய்த நல்வினையின் பயனால் நானும் என் கணவனும் வானவர்களாயினேம். இந்த நல்வினை முடிந்தபின்னர், மீண்டும், கோபத்தினால் உண்டாகிய தீவினையின் பயனை

அடைந்தே தீரவேண்டும். இவ்வாறே பிறந்தும், இறந்தும், நல்வினையின் முடிவில் தீவினையின் பயனையும், தீவினையின் முடிவில் நல்வினையின் பயனையும் அனுபவித்துக்கொண்டே இருப்போம். பிறகு, மகதநாட்டில் கபிலை நகரத்தில் புத்த தேவன் தோன்றி, போதிமரத்தின் அடியிலிருந்து உண்மை யுணர்ந்து, இவ்வுலகத்தாருக்கெல்லாம் அறவுரை கூறுங் காலத்தில், யாமும் அவருடைய அறவுரைகளைக் கேட்டுத் துறவுபெற்றுப் பிறப்பொழிப்போம், இப்பயனை யாம் பெற்ற தற்குக் காரணம், முன்பு காவிரிப்பூம் பட்டினத்தில், புத்தர் கோயிலில் இந்திரனால் கட்டப்பட்டிருக்கின்ற ஏழு அரங்கு களையும் உன் தந்தையுடன் சென்று வணங்கியதேயாகும். யாம் பிறப்பொழிப்பது இன்னும் பலநாட்களுக்குப் பின்பே யாதலால் அதுவரையிலும், பலவகையான சித்திரங்களைச் செய்துகொண்டிருப்போம். நீயோ இந் நகரில் உள்ள பல சமயவாதிகளிடமுஞ் சென்று அவர்கள் கூறுங் கொள்கை களைக் கேட்டு, அவை யெல்லாம் உனக்கு உண்மை யென்று தோன்றாமையால் பின்பு பௌத்த சமயத்தை மேற்கொள் வாய்" என்று கூறி மறைந்தாள்.

பின்பு மணிமேகலை, செங்குட்டுவன் எனுஞ் செங்கோல் வேந்தன் வஞ்சிமாலை புனைந்து படைகளுடன், வடநாடு புகுந்து, கங்கைக் கரையில் தங்கி, நாவாயின் வழியே கங் கையைத் தாண்டிச் சென்று, கனகவிசயர் முதலிய வேந்தர் களை வென்று அவர்கள் தலையில் இமயக்கல்லை, ஏற்றியும் தன் முடியில் வாகை மாலையைச் சூடியும் வந்து புகழ் விளங்கு கின்ற அவ் வஞ்சிமா நகரத்தினுட் சென்றாள். அவள் தனக்கு மணிமேகலா தெய்வங் கொடுத்த வேற்றுருக் கொள்ளும் மந்திரத்தால் ஒரு முனிவன் வடிவங்கொண்டாள். அம் மாத வன் உருவத்துடனே, தேவகுலங்களும், திண்ணைகளும்,

மாதவர் சாலைகளும், பூஞ் சோலைகளும், பொய்கைகளும் நிறைந்து, தவஞ்செய்யும் முனிவர்களும், கற்றடங்கியவர்களும், நன்னெறியறிந்த தொன்னூற் புலவர்களும் எங்கும் நிறைந்திருக்கின்ற புறநகரத்தை அடைந்தாள்.

பிறகு மணிமேகலை, அங்குள்ள சமயவாதிகளையடைந்து ஒவ்வொருவருடைய கொள்கைகளையுங் கேட்கத் தொடங்கினாள். அவள் வேதத்தோடு பொருந்திய அளவை வாதியையடைந்து உனது கொள்கை யாதென்று கேட்டாள். அவன், "வேதவியாதன் அளவை இலக்கணத்தைப் பத்தாகவும், கிருதகோடி என்பவன் எட்டாகவும், வகுத்திருக்கின்றனர். உலோகாயத சமயத் தலைவனாகிய பிருகற்பதியும், பௌத்த சமயத் தலைவனாகிய சினனும், சாங்கிய சமயத் தலைவனாகிய கபிலனும், நையாயிக சமயத் தலைவனாகிய அக்கபாதனும், வைசேடிக சமயத் தலைவனாகிய கணாதனும், மீமாஞ்சக சமயத் தலைவனாகிய சைமினியும், அளவைகள் ஆறு எனக் கொண்டனர். இவ்வளவைகளைக் கொண்டு உண்மைப் பொருள் உணர் நிலை எமது கொள்கை" என்று கூறினான்.

பிறகு மணிமேகலை சைவ வாதியை அடைந்து "உனது தெய்வம் எவ்வடிப்பட்டது" என்று கேட்டாள். அவன், "சந்திரன் சூரியன் உயிர், நிலம், நீர், தீ, வளி, வான் ஆகிய எட்டு வடிவமாயிருப்பவனும், உயிரும் உடலுமாயிருப்பவனும், கலைகளின் உருவமாக உள்ளவனும், படைத்துக் காத்து அழிக்குந் தன்மையுடையவனும், இங்கு உண்டு அங்கு இல்லை என்பதின்றித் தானே எல்லாமாகி நிற்பவனும் ஆகிய ஒப்பற்ற முதல்வனே எமது இறைவன்' என்று கூறினான்.

பிறகு பிரமவாதியை அடைந்து, "உன் மதம் என்னை" வென்று கேட்க. அவன், "இவ்வுலகமெல்லாம் தேவனால் இடப்பட்ட பொன் முட்டை" என்று கூறினான்.

பிறகு வைணவ வாதியை "உன் கடவுள் யார்?" என்று கேட்க அவன், "எம் கடவுள் திருமால், அவன் பழமையான வன். இவ் உலகையெல்லாம் தன்னிடத்தில் விரித்தும் தொகுத்தும் காப்பாற்றுகின்றவன்" என்று கூறினான்.

பிறகு வேதவாதியை அடைந்து, "உன் மதம் யாது" என்று கேட்க, அவன் "எம் மதம் வேதமேயாகும், அவ் வேதத்திற்குக் கற்பம் கையாகவும், சந்தம் காலாகவும், தர்க்கம் கண்ணாகவும், நிருத்தம் செவியாகவும், சிக்ஷை மூக்காகவும், வியாகரணம் முகமாகவும் ஆறு அங்கங்கள் இருக்கின்றன. அவ் வேதம் ஆதியந்தம் இல்லாதது. அநாதியாகவுள்ளது" என்று கூறினான்.

சைவக வாதியை அடைந்து உன் கடவுள் யார்? நூற் பொருள் யாது? என்று கேட்டாள். அவன் "எல்லாப் பொருள்களிலும் எப்பொழுதும் அமைந்திருக்கின்ற மற்கலி தேவனே எமது கடவுள். நவ கதிர் என்னும் நூலிற் கூறப் பட்டுள்ள உயிரும் நால்வகை அணுக்களும் ஆகிய ஐந்துமே நூற்பொருள்" என்று கூறினான்.

பிறகு நிகண்டவாதியை அடைந்து "உனது கடவுள் யார்? நூற்பொருள் யாது?" என்று கேட்டாள். அவன், "அருகனே எமது கடவுள். அவனால் செய்யப்பட்ட, அங்காகமம், பூர்வாகமம், பகுசுருதியாகமம் என்னும் மூன்றிலும் கூறப்படுகின்றவைகளே எமது கொள்கைகள்" என்றான்.

பிறகு சாங்கிய வாதியை அடைந்து அவனுடைய கொள்கைகளையும், வைசேடிகவாதியைக் கண்டு அவனுடைய கோட்பாடுகளையும் உணர்ந்து, பூதவாதியைச் சேர்ந்து "உனது கொள்கை என்ன?" வென்று கேட்டாள். ஆத்திப்பூ, கருப்புக் கட்டி மற்றுஞ்சில பொருள்களையும் ஒன்று சேர்த்தால்,

கள்ளினிடத்தில் உள்ள சக்தி அதில் உண்டாவதுபோல ஐந்து பூதமும் ஒன்று சேர்ந்த போது, அவற்றின் கூட்டுற வால் அறிவு பிறக்கின்றது. அவை தனித்தனியாகப் பிரிந்த போது அவ் அறிவு அழிந்துபோகும். இதுதான் எமது கொள்கை. மற்றய எமது கொள்கைகளும், உலோகாயதர் கொள்கைகளும் ஒன்றேயாகும்'' என்று கூறினன்.

இவ்வாறே மணிமேகலை பத்துவகைச் சமயவாதிகளின் கொள்கைகளையும் கேட்டு அவைகள் ஒன்றிலும் நம்பிக்கையில் லாதவளாகி, மாதவியையும், சுதமதியையும், அறவண அடி களையுந் தேடிக்கொண்டு புற நகரத்தைக் கடந்தாள்.

பிறகு மனைக்குள் நீராடுகின்ற மகளிரின் கூந்தலில் உள்ள வாசனையுடன் கூடித் தூம்பின் வழியே வந்த நீரும்; நீர் இறைக்கும் எந்திரங்கள் உள்ள குளத்தில், கலவைச் சாந் தணிந்த ஆடவரும் பெண்டிரும் விளையாடிய நீரும்; அரசன் பிறந்தநாட் கொண்டாட்டத்தில், பீச்சுங் குழாய்களின் வழியே சிந்துகின்ற வாசனை நீரும்; அறஞ்செய்கின்றவர்கள் அகில் முதலியவற்றைப் புகைக்கின்ற பந்தர்களில் உள்ள குடங்களிலிருந்து ஒழுகுகின்ற நீரும்; வாசனைச் சாந்து அரைப் போர் மனைகளிலிருந்து ஓடிவருகின்ற நீரும்; பல பக்கங்களி லும் வந்துபாய்கின்றமையால், முதலை, மீன் முதலியவைகள் புலால் நாற்றமின்றியும், வண்டுகள் மொய்க்கும்படி, தாமரை, குவளை, கழுநீர், ஆம்பல் முதலியவைகள் நிறைந்தும் இருக் கின்ற அகழியையும்; அவ்வகழால் சூழப்பட்டிருக்கின்ற வேலைப்பாடமைந்த மதிலையும்; கடந்து, அரசனுடைய கொடி நின்று விளங்குகின்ற இடத்தை அடைந்தாள்.

வாயில் காப்பதற்காக அமைந்த காவலாளர் நெருங்கி வாழும் வீதியைப் பார்த்தாள். மீன் விற்கும் பரதவர், உப்பு விற்கும் உமணர், கள் விற்கும் வலைச்சியர், பிட்டு வாணிகர்,

அப்ப வாணிகர், ஆட்டு வாணிகர், கயிறுதிரித்து விற்பவர், வாசனைத் திரவியங்கள் விற்பவர் வாழ்கின்ற வீதிகளையும், பார்த்தாள். மட் பாண்டஞ் செய்யும் குயவர்கள், செம்பு வேலை செய்கின்றவர், வெண்கல வேலை செய்யும் கன்னார், பொற்பணி செய்கின்ற தட்டார், மரத்தைவெட்டுந் தச்சர், சிற்பாசாரிகள், சித்திரம் எழுதுவோர், தோலின் துன்னர், தையற்காரர், மாலைகட்டுகின்றவர்கள், சோதிடர்கள், இசை பாடும் பாணர்கள் ஆகிய இவர்கள் வாழ்கின்ற தெருக்களையும் நோக்கினாள். சங்கறுக்கின்றவர்கள், முத்துக் கோக்கின்றவர்கள், நாடக மாதர்கள் ஆகிய இவர்களின் வீதிகளையும் பார்த்தாள். தானியங்கள் விற்பனை செய்கின்ற கடைத்தெரு, இருந்தேத்துவராகிய மாகதர், நின்றேத்துவோராகிய சூதர், தாளத்திற் கேற்ப ஆடுகின்றவராகிய வேதாளிகர், ஆகியவர்கள் வாழ்கின்ற விதி, விலைமாதர் வசிக்கின்ற வீதி, நெசவுத் தொழில் செய்வோர் வாழ்கின்ற வீதி, பொன்வாணிகர் வீதி, இரத்தினவாணிகர் வீதி, வேதியர் வீதி, அரசர்கள் வீதி, அமைச்சர்கள் வீதி, மற்றும் சேனைத் தலைவர் முதலியவர்கள் வாழ்கின்ற வீதி ஆகிய எல்லாவற்றையுங் கண்டாள். மன்றங்கள், அம்பலங்கள், சந்திகள், சதுக்கங்கள், புதிதாகக் கொண்டு வந்த யானைகளைப் பழக்குவோர் வீதி, குதிரைகளுக்கு நடை பழக்குவோர் வீதி, செய்குன்றுகள், மரங்கள் அடர்ந்த சோலைகள், நல்ல நீர் நிலைகள், அறச்சாலைகள், கூடங்கள், பொன்னம்பலங்கள், சித்திரம் எழுதப்பெற்ற தவச்சாலைகள் இவைகளை எல்லாங் கண்டு களித்தாள்.

பிறகு புத்த தேவனுடைய நல்லறத்தைக் கூறிக் கொண்டிருப்போர் வாழ்கின்ற பள்ளியை அடைந்து ஆங்கிருந்த கோவலன் தந்தையாகிய மாசாத்துவானைக் கண்டு வணங்கினாள். அவனுக்குத் தன் கையிலுள்ள பாத்திரத்தின் பெரு

மையையும், அப்பாத்திரத்தைக் கொண்டு செய்த அறத்தின் பெருமையால் ஆபுத்திரன் சாவக நாட்டில் புண்ணியராசனுகப் பிறந்து அரசாளுகின்ற செய்தியையும், தான் அவனை மணிபல்லவத்திற்கு அழைத்துவந்து புத்த பீடிகையைக் காட்டிப் பழம்பிறப்பை உணரும்படி செய்ததையும், அங்கு தீவதிலகை வந்து கூறிய செய்திகளையும், காவிரிப்பூம்பட்டினம் கடலில் மூழ்கியதால், அறவண அடிகளும், மாதவியும் சுதமதியும், வஞ்சிமா நகரத்தை அடைந்தார்கள் என்று தீவதிலகை கூறியதையும், புண்ணியராசனை அவனுடைய நகரமாகிய நாகபுரத்திற்கு அனுப்பிவிட்டுத் தான்மணிபல்லவத்தை நீங்கி வந்ததையும், தாயாகிய கண்ணகியைக் கண்டு வணங்கியதையும், தந்தையாகிய கோவலனது முற்பிறப்பின் வரலாறு முதலியனவற்றை அவளிடங் கேட்டுணர்ந்ததையும் பின் வேற்றுருக்கொண்டு பல சமயவாதிகளையுங் கண்டு அவர்களுடைய கொள்கைகளை அறிந்ததையும், அவர்கள் கூறிய சமயக் கோட்பாடுகள் யாவும் தன் மனத்திற்குப் பிடிக்காமையால், பௌத்த தருமத்தைக் கேட்கும் பொருட்டு அறவண அடிகளைத் தேடிக்கொண்டு வந்ததையுங் கூறினாள்.

இவற்றைக் கேட்ட மாசாத்துவான், "மணிமேகலையே! எனது நல்வினையே உன்னைக்காணும்படி செய்தது. உன் தந்தையுந் தாயுமாகிய கோவலனும் கண்ணகியும் அடைந்த கொடுந்துயரங்களையும், மதுரை நகரம் தீயால் அழிந்ததையும், கேள்வியுற்று, எனது செல்வங்களையெல்லாந் துறந்து, புத்த சமயத்திற் புகுந்து தவஞ் செய்யத் தொடங்கினேன். யான் இங்கு வந்ததற்குக் காரணம் சொல்லுகின்றேன் கேட்பாயாக!" என்று கூறிப் பின்னர் அங்கு அவன் வந்ததற்கு ஏற்பட்ட காரணத்தையும் கூறத் தொடங்கினான்.

முன்னாளில் இந்நகரத்திலுறைந்து உலக முழுவதையும் ஆண்ட இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் என்னும் மன்னவன் தன் மனைவிமார்களுடன் இச்சோலையைச் சார்ந்திருந்தான். அப்பொழுது சாரணர் சிலர், இலங்கைத் தீவில் உள்ள சமனொளி மலையை யடைந்து புத்தர் திருவடிகளை வணங்கி ஆகாயவழியே வந்து இச் சோலையில் இறங்கிக் கல் ஆசனங்களில் இருந்தனர். அவர்களைக் கண்ட அரசன் வணங்கி, உணவு கொள்ளும்படி செய்து போற்றினான். அவர்கள், பிறவியினால் வரக்கூடிய துன்பங்களையும், பிறவாமையால் உள்ள இன்பத்தையும், பிறவாமையை அடைவதற்குப் புத்தர் கூறிய நால்வகை வாய்மையையும், அரசனுக்குக் கூறினார்கள். அப்பொழுது உன் தந்தைக்கு ஒன்பது தலைமுறைக்கு முன்னோனாகிய கோவலன் என்பவன் இமயவரம்பனுக்கு நண்பனாதலால் அவனுடன் கூட இருந்து சாரணர் கூறிய அறமொழிகளைக் கேட்டான். உடனே அவன் தான் ஈட்டிய கோடிக்கணக்கான செல்வங்களையும், தன் முன்னோர்களால் நல்வழியில் தேடிவைத்திருந்த பொருள்களையும், எழுநாட்களுக்குள் வறியோர்களுக்கு வழங்கிவிட்டுத் தவம் புரியத் தொடங்கினான். அவனால் மலைபோலக் கட்டப்பட்டு ஒளி விளங்குகின்ற புத்தர் கோயில் இப்பொழுது உள்ளவர்களுக்கும் காட்சி கொடுத்து நிற்கின்றது. அதை வணங்குதற்காகவே இந்நகரத்திற்கு வந்தேன். காவிரிப்பூம் பட்டினத்தைக் கடல் விழுங்கிவிடும் என்று இங்குள்ள முனிவர்கள் சொல்லியதனால் நான் இங்கேயே தங்கிவிட்டேன். "தீவினை காரணமாகக் கொலையுண்டு மடிந்த உன் தந்தை நல்வினையால் தெய்வ உடம்பு பெற்று, மீண்டும் தீவினையால் பிறந்து இறுதியில் புத்தர் தோன்றி அவர் சொல்லும் அறமொழிகளைக் கேட்டுப் பிறவாத் தன்மையைப் பெறுவான்" என்று அறிஞர்

கள் சொல்ல அறிந்தேன். நானும் புத்தர் பெருமானுடைய அறவுரைகளைக் கேட்டேன். நீ உனது பிற்கால நிகழ்ச்சிகளைக் கந்திற்பாவையினால் அறிந்தாய் என அறவண அடிகள் சொல்லியதால் உணர்ந்தேன். அவ்வடிகள் உனக்குத் தருமோபதேசம் செய்வதற்குத் தகுந்த இடம் காஞ்சி நகரமே எனக் கருதி, அங்கே சென்றார். மாதவியும் சுதமதியும் அவருடன் காஞ்சிக்கே சென்றனர். அன்றியும் அந்நகரத்தில் மழையில்லாமையால் வறுமை மிகுந்துவிட்டது. அதனால் மாதவர்க்கு அன்னமிடுவோரும் அந்நகரில் இலராயினர். ஆகையால் மாதவர் பலரும் இந்நகரத்தை அடைந்தனர். ஆருயிர் மருந்தாகிய அமுத சுரபியை வைத்திருக்கும் நீ இப்பொழுதே சென்று அந் நகரத்தில் உள்ள உயிர்களைக் காப்பாற்றுதல் உனது கடமையாகும்'' என்று கூறினான்.

## 12. மணிமேகலை காஞ்சியை அடைந்து கலக்கம் நீங்குதல்.

காஞ்சி நகரத்தில் மழையின்றி, மன்னுயிர்கள் மடிகின் மாதவர்களும் அந்நகர் விட்டு அகன்றனர்; என்று மாசாத்துவானாற் கூறக்கேட்ட மணிமேகலை, நெஞ்சந்துடித்து, "இன்னே சென்று அந்நகரமக்களைக் காப்பாற்றுகின்றேன்'' என்று கூறி, அமுதசுரபியைக் கையிலேந்தி, வஞ்சி நகரத்தின் மேற்றிசையை அடைந்து, அந்தரஞ் செல்லும் மந்திரத்தை யோதி வடதிசையடைந்து காஞ்சிநகரைக் கண்டாள். அந்நகரம். அணிகலன் இழந்த நங்கையைப் போலவும்; மதியை இழந்த வானம் போலவும்; மலரை இழந்த பொய்கை போலவும்; நீரையிழந்த பயிரைப் போலவும், விளைவையிழந்த வயலைப் போலவும்; மணத்தையிழந்த மலரைப் போலவும்;

செல்வங்குன்றி, வறுமை மிகுந்து, வனப்பழிந்து போயிருப்பதைக் கண்டு மனமிரங்கினாள். பிறகு வலம் வந்து, அந்நகரின் நடுவில் இறங்கினாள். அங்கே தொடுகழற் கிள்ளியின் துணைவனாகிய இளங்கிள்ளி என்பவனால் கட்டப்பட்ட புத்தர் கோயிலைக் கண்டாள். அதனை வணங்கி அதற்குத் தென் மேற்குப் பக்கமாகச் சென்று குளிர்ச்சி நிறைந்த சோலையொன்றைப் பார்த்து அதில் தங்கினாள்.

மணிமேகலை அங்கு வந்திருக்குஞ் செய்தியை அறிந்த ஒருவன் விரைந்து சென்று; அந்நகர மன்னவனாகிய துணையிளங்கிள்ளியைக் கண்டு வணங்கி "அரசே! சிறந்த தவவொழுக்கம் உடையவளும், இந்நாவலந்தீவில் யாவரினுஞ் சிறந்தவளும் ஆகிய மணிமேகலை என்பவள், உலகத்துயிர்கட்கெல்லாம் உணவளிக்கும் அமுதசுரபி என்னும் பாத்திரத்துடன், கோடைநாளில் மழை தோன்றிய தென்ன இந்நகரில் வந்து தருமதவனத்தில் இருக்கிறாள்" என்று கூறினான்.

அது கேட்ட மன்னவன், வறியவன் புதையல்பெற்றது போலவும்; குருடன் கண் பெற்றது போலவும்; நடுக்கடலில் வீழ்ந்து தத்தளிப்பவன் புணை பெற்றதுபோலவும்; படர்வதற்குப் பற்றுக்கோடற்றுப் பரிதவிக்கும் பூங்கொடிக்குக் கொழுகொம்பு கிடைத்தது போலவும்; மிக்க மகிழ்ச்சி யடைந்து முன்பு நமக்குக் கந்திற்பாவை கூறியது உண்மை யென்று நினைத்து, அத் தெய்வத்தை வணங்கி, அமைச்சர்களுடன் தருமத வனத்தை யடைந்தான். அங்கே மணிமேகலை வீற்றிருப்பதைக் கண்டு அவளை நோக்கித் "தவச் செல்வியே! செங்கோல் கொடுங்கோலானதனாலோ, மாதவர்களின் தவம் குன்றினதனாலோ, பெண்மக்களின் கற்புத்தன்மை குறைவுபட்டதனாலோ அல்லது வேறு எக்காரணத்தாலோ அறியேன்,

நாடெல்லாம் மழையின்றி விளைபொருள் குன்றித் துன்புறும் நிலைமையை அடைந்தது. இனி என்ன செய்வது என்று தோன்றாமல் வருந்திக்கொண்டிருந்தேன். அப்பொழுது ஒரு தெய்வம் என்முன் தோன்றி "நீ வருந்தாதே! உனது நல்வினைப் பயனால் ஒரு பெண் இந்நகரத்திற்கு வருவாள். அவளிடத்தில் எடுக்க எடுக்கக் குறையாமல் உணவு சுரக்கும் தெய்வத்தன்மை பொருந்திய கலம் ஒன்று உண்டு. அக் கலத்தைக் கொண்டு அவள் ஊட்டும் உணவால் உனது நாடு பிழைக்கும். அவள் இந்நகரத்தை அடைந்தவுடன் வானம் பொய்யாமல் மாரியைச் சொரியும். கார் வறண்டாலும் நீர் வறளாது. அவள் இந்நகரத்திற்கு வந்தபின் நடைபெறப் போகும் அதிசய நிகழ்ச்சிகள் பலவாகும். அவள் இங்கு வந்து உறைவதற்காகக் கோமுகி என்னும் பொய்கையும், அதைச்சூழ்ந்த மணிபல்லவம் என்னும் தீவும் இந்நகரையடைந்தனவென்று கூறும்படி, ஒரு தடாகத்தையும் அதைச் சுற்றிலும் ஒரு சோலையையும் உண்டுபண்ணுவாயாக" என்று சொல்லிச் சென்றது. பின்னர் அத் தெய்வத்தின் ஆணைப் படியே பொய்கையையும், சோலையையும் உண்டு பண்ணினேன். அந்த இடம் இதோ இருக்கின்றது" என்று அவளை அழைத்துச் சென்று அவ்விடத்தைக் காட்டினான்.

மணிமேகலையும் அவ்விடத்தையடைந்து, மணிபல்லவத்தைப் போல் விளங்குகின்ற சோலையையும், கோமுகியைப் போல் தோன்றுகின்ற பொய்கையையும் பார்த்து மகிழ்ச்சி கூர்ந்தாள். தனது பழம்பிறப்பை அறிவித்த புத்தபீடிகையையும் அச் சோலையில் செய்வித்தாள். தீவதிலகையையும் மணிமேகலா தெய்வத்தையும், வழிபாடு செய்வதற்காக அத் தெய்வங்களுக்குக் கோட்டங்களும் அமைப்பித்தாள். அவைகு நாட்பூசைகளும், சிறப்புவிழாக்களும் நடைபெறச்

செய்து வணங்கினாள். பிறகு புத்த பீடிகையில், ஆருயிர் மருந்தென்று சொல்லத்தக்க அமுதசுரபியைவைத்து அதனைப் பூசித்துப் "பசித்துயர் உற்றோர் அனைவரும் உணவு கொள்ள வருக" என்று அழைத்தாள்.

அழைத்தவுடன், கண் தெரியாதவர்களும், காது கேளாதவர்களும், கால் முடமானவர்களும், ஆதரவற்றவர்களும், ஊமையர்களும், பிணியினால் வருந்துகின்றவர்களும், தவவேடத்தையும், விரதத்தையும் உடையவர்களும், பசித்துன்பம் உற்றவர்களும், சோம்பலால் வறுமையை யடைந்த மாக்களும், பன்னூறாயிரம் விலங்கின் தொகுதியும், மற்ற உயிர்களும் கூடிவந்து உணவருந்தினர். அவ் உணவு, நீர் வசதியும் கால வசதியும் உள்ளபோது நல்ல நிலத்தில் விதைத்த விதையைப்போல மேலும் மேலும் பெருகி அவ்வுயிர்களின் பசிப்பிணியை நீக்கியது. உண்டு களித்தவர்கள் அனைவரும் மணிமேகலையை நெஞ்சாரப் போற்றி வாயார வாழ்த்திச் சென்றனர். மணிமேகலை அங்கு வந்து அறம் புரிதலை அறிந்த அறவண அடிகளும், மாதவியும், சுதமதியும், அவள் இருக்கின்ற அறச்சாலையை அடைந்தனர். உடனே மணிமேகலை எழுந்து அறவண அடிகளை வணங்கி, ஆசனத்தேற்றி அறுசுவை உணவளித்துப் போற்றித் தான் செய்த நல்வினையின் பயன் தனக்குக் கிடைப்பதாக என்று கூறித் தொழுதாள்.

அறவண அடிகள், தம்மை வணங்கிய மணிமேகலையை வாழ்த்தி மணிமேகலா! முன்னொருகாலம் "நாக நாட்டு மன்னவன் மகளாகிய பீலிவளை, மணிபல்லவத் தீவிலிருக்கும் போது அங்கு வந்த கம்பளச் செட்டியினிடம் அவள் தனது மகனை அளித்து அவனைச் சோழமன்னனிடம் சேர்த்துவிடுமாறு கூறினாள். அவன் அம்மகனை வாங்கிக்கொண்டு கலத்தி லேறிக் காவிரிப்பூம் பட்டினத்திற்கு வரும்போது நடுக்கட

கப்பல் உடைந்தது. அதனால் மகன் காணாமற் போய்விட்டான். இச்செய்தியைக் கேள்வியுற்ற மாவண்கிள்ளி மிகவும் மனத்துயரடைந்து, மகனைத் தேடி அலைந்ததனால், இந்திரவிழாச் செய்தலை நகரம் மறந்தது. அதனால் இந்திரன் சினந்து இந்நகரைக் கடல் கொள்க என்று சபித்தான். அன்றியும், முன்னொரு காலத்தில் உன் தந்தையின் குலத்திலிருந்த முன்னோனொருவன், வங்கத்திலேறிக் கடலிற் செல்லும்போது, வங்கம் கடலில் மூழ்கிக் கெடுகின்ற நிலையை யடைந்ததனால் ஏழுநாள் அளவும் துன்பத்தால் உழந்தான். அவன் அறவொழுக்கங்களிற் சிறந்தவனாதலால், அவனுடைய துயரத்தை இந்திரனுடைய பாண்டுகம்பளம் தனது நடுக்கத்தால் இந்திரனுக்கு உணர்த்தியது. அதுகண்ட இந்திரன் மணிமேகலா தெய்வத்தை ஏவி, அவனைக் காப்பாற்றும்படி செய்தான். இதைச் சாரணர் வாயிலால் உணர்ந்த உனது தந்தை அத்தெய்வத்தின் பெயரையே உனக்கிட்டான். புகார் நகரத்தில் இந்திரவிழா நடவாமையால், அம் மணிமேகலா தெய்வமும், நகரைக் கடல் கொள்ளுமாறு சபித்தது. ஆதலால் காகந்தி நகரம் கடலில் மூழ்கியது. அதனால் நானும் உனது தாயாரும், உன் பொருட்டாக இந்நகரத்தை நண்ணினோம்" என்று அறவண அடிகள் கூறினார்.

மணிமேகலை மீண்டும் அவருடைய அடியிணைகளைப்பரவி "இச்செய்தியை மணிபல்லவத்தில் புத்தபீடிகையைக் காத்து தும், தீவதிலகை கூறினாள். ஆதலால் நான் காவிரிப்பூம் டினத்தை யடையாமல், வஞ்சி நகரத்திற் புகுந்து வேற் க் கொண்டு, வேறு வேறாகக் கூறுகின்ற நூல்களை ஆதார க் கொண்ட சமயவாதிகளிடம், அவரவர்களின் சமயக் ள்கைகளைக் கேட்டுணர்ந்தேன். அச்சமயங்களெல்லாம் ை புல்லனவாகத் தோன்றமையால் அவற்றை யெல்

லாம் மறந்தேன். ஆதலால் பெரியோராகிய நீங்களே உண்மைப் பொருளை உரைத்தருளவேண்டும்'' என்று புகன்றாள். உடனே அவர் ஆதிசினேந்திரரால் அருளப்பட்ட, காண்டல், கருதல் என்னும் இரண்டு அளவைகளையும், அவற்றின் போலி வகைகளையும், முதலில் விரிவாகக் கூறினார்.

பிறகு அறஞ் செய்தலை மேற்கொண்டு, ஒழுக்கத்தில் தலைசிறந்து நின்று, பழம் பிறப்பின் செய்திகளை உணர்ந்த மணிமேகலை, புத்த, தன்ம சங்கம் என்னும் மும்மணிகளையும் வணங்கக்கூடிய மந்திரங்களாகிய "புத்தம் சரணங்கச்சாமி, தர்மம் சரணங்கச்சாமி, சங்கம் சரணங்கச்சாமி'' என்னும் மூன்றையும்கூறி அவற்றை மும்முறை வணங்கி அறவண அடிகளைச் சரணமாக அடைந்தாள். அப்பொழுது அறவண அடிகள் மணிமேகலையை நோக்கி, "இவ்வுலகத்தில் உயிர்களெல்லாம், உண்மைப் பொருள் உணரும் அறிவின்றிப் பாழ்படுங்காலத்தில், தேவர்கள் துடித லோகத்தில் உள்ள பிரபாலர் என்னும் கடவுளை யடைந்து முறையிடுவார்கள். அப்பிரபாலர் இவ்வுலகத்திற் புத்ததேவராகப் பிறப்பார், பிறந்த அவர் அரசமரத்தின் அடியில் உறைந்து, உண்மை யுணர்ந்து மாரனை வென்ற வீரராகியும், காமம், வெகுளி, மயக்கம் என்னும் முக்குற்றங்களையும் அறுக்கின்றவராகியும் விளங்குவார். அத்தகையவர் கூறும் அற வுரைகளே இவைகள்; முற்காலத்தில் தோன்றிய எண்ணிறந்த புத்தர்களும் இவற்றையேதான் கூறியருளினார்கள்,, என்று சொல்லிப் "பேதமை, செய்கை உணர்வு, அருவுரு, வாயில், ஊறு, நுகர்வு, வேட்கை, பற்று பவம், தோற்றம், வினைப்பயன் என்னும் பன்னிரு நிதானங்களின் விரிவுகளையும், மற்றும் புத்தமத உண்மைக விளங்க உணர்த்தினார். மணிமேகலையும் அவ்வுபதேச மொழிகளைக்கேட்டு அந்நகரிலேயே தவம்புரிந்து கொண்டிருந்

கின்றாள்.

3044

# அருஞ்சொற்பொருள்.

அ

அகம் - மனம்,
அகலுதல் - நீங்குதல்
அணங்கு-தீண்டி வருத்தும்தெய்வம்
அணிகலன் - ஆபரணம்
அண்மி - நெருங்கி
அரங்கு - மேடை
அரவாய்க் கடிப்பகை-வேப்பிலை
அருகர் - சைனர்
அவண் - அங்கு
அவநெறி - வீண்வழி
அளவை வாதி - தருக்க வாதி
அற உரை - தருமோபதேசம்
அற ஒழுக்கம் - நல்லொழுக்கம்

ஆ

ஆதுலர் - வறிஞர்
ஆற்றிய - செய்த
ஆற்றுநர்க்கு - தமக்கு உதவி செய்பவர்களுக்கு

இ

இரத்தல் - பிச்சை எடுத்தல்
இருமுதுகுரவர்-தாய் தந்தையர்
இல்லம் - வீடு
இழைத்தேன் - செய்தேன்
இன்னே - இப்பொழுதே

ஈண்டு - இங்கே
ஈமம் - சுடுகாடு
ஈமப்புறங்காடு - சுடுகாடு
ஈனு முன்பே - கன்று போடும் முன்பே

குத்து - சிந்தி
குதல் - சிந்துதல்
உள்ளத்துயர் - மனத்துயர்
உள்ளம் - மனம்
உறுவது - அடைவது
உறையுள் - இருப்பிடம்

ஊ

ஊடல் - கணவனுக்கும் மனைவிக்கும் உண்டாகும் விளையாட்டான பிணக்கு
ஊண் - உணவு
ஊன் - மாமிசம்

எ

எள்ளினன் - இகழ்ந்தான்

ஐம்படை ஆபரணம் - சங்கு, சக்கரம், வில், வாள், தண்டு ஆகிய ஐந்தும் பொன்னால் செய்யப்பட்டு ஒன்றாகச் சேர்த்துள்ள ஆபரணம்
ஐயக்கலன் - பிச்சைப்பாத்திரம்
ஐயம் - பிச்சை
ஐயவிக்கடிப்பகை - வெண் சிறு கடுகு

ஒ

ஒறுக்காமல் - தண்டிக்காமல்
ஒறுத்தல் - தண்டித்தல்

ஓ

ஓவியம் - சித்திரம்

க

கசிந்து - சிந்தி
கசிதல் - சிந்துதல்
கடி - பேய்
கடிப்பகை-பேய்களுக்குப் பகையாயிருப்பது
கணிகையர் - நடனமாதர்கள்
கண்ணன் - கிருஷ்ணன்
கதிர் - சூரியன்

கந்திற்பாவை - தூணிலிருக்கும் பதுமை
கலைநியமம் - சிந்தாதேவியின் கோயில்
கரி - சாட்சி
கருதல்-அனுமானப் பிரமாணம்
கருமுற்றி - கர்ப்பம் நிறைந்து

கா

கா - சோலை
காண்டல்-பிரத்தியட்சப் பிரமாணம்
காதலன் - கணவன்
காமன் - மன்மதன்
காவற்கூடம் - சிறைச்சாலை
காரிருள் - நிறைந்தஇருள், கருத்த

கி

கிளவி - மொழி
கிளர் ஒளி - மிகுந்த ஒளி

கு

குமரி - கன்னியாகுமரி
குறுகி - அடைந்து
குன்றவில்லை - குறையவில்லை

கோ

கோட்டம் - தெய்வக் கோயில்
கோட்டில் - கொம்பில்
கோடு - கொம்பு
கோயில் - அரண்மனை
கோள் - கிரகம்

சா

சாந்தம் - சந்தனம்
சாவக நாடு - ஜாவா தேசம்
சார்பினர் - பக்கத்தினர்

சி

சிகை - குடுமி
ந்த - உடைந்த
ரங்கள் - அற்புதங்கள்
சிற்பம் - சித்திரவேலை

சீலம் - ஒழுக்கம்

சு

சுரக்கும் - கொடுக்கும்
சுழன்று - சுற்றி
சுள்ளி - விறகு

சூ

சூல் - கர்ப்பம்
சூள் - சபதம்
சூழ்ந்த - சுற்றிய

செ

செவி யறிவுறுத்திய - உபதேசித்த
சென்னி - தலை

ஞா

ஞாலம் - உலகம்

த

தணியா - நீங்காத
தண் மதி - குளிர்ந்த சந்திரன்
தமியனாய் - தனியனாக

தா

தாழி - மண் சால்

தி

திட்டி விடம்-கண்ணாற் பார்த்தவுடன் கொல்லுகின்ற பாம்பு

து

தும்பிகள் - வண்டுகள்
துயில் - தூக்கம்
துலங்க - பிரகாசிக்க
துன்னர் - தையற்காரர்

தெ

தெய்வதச்சன் - மயன்

தே

தேவ குலம் - தெய்வக்கோயில்

ந

நஞ்சுவிழிஅரவு - திட்டிவிடம்
நண்ணார் - பகைவர்
நலியாமல் - துன்பப்படாமல்
நவிலுதல் - சொல்லுதல்

நள்ளிருள் - நடுராத்திரி
நறுமலர் - வாசனையுள்ள மலர்
நன்னிமித்தம் - நல்ல சகுனம்

நா

நாவாய் - ஓடம்
நாழிகை வட்டில் - நாழியறியும் சக்கரம்
நாளங்காடி - பகலில் வியாபாரம் செய்யும் இடம்

நி

நிகழும் - நடைபெறும்

நு

நுகரும் - அனுபவிக்கும்
நுவன்று - சொல்லி

நே

நேர்ந்த - உண்டான
நேயம் - அன்பு

நோ

நோன்பு - விரதம்

ப

பசலை - தேமல்
படிமம் - உருவம்
படைக்கலம் - ஆயுதம்
பணித்தான் - கட்டளையிட்டான்
பரிகள் - குதிரைகள்
பரிசனம் - பரிவாரம், சேர்ந்தவர்கள்
ருக்கைக் கற்கள் - சிறுகூழாங்கற்கள்
படியாக - பலவாறாக
ற்று - உலக ஆசை

பா

சம் - கயிறு
ாடிவீடு - படைகள் தங்கும் இடம்
ண்டு கம்பளம் - வெள்ளைக் கம்பளம், இது இந்திரனிடத்தில் உள்ளது
பாதச்சுவடு - பாதஅடையாளம்
பாவை - பதுமை

பி

பிக்குணிக் கோலம் - பிச்காரிவேடம்
- கட்டி
பித்தி - பைத்தியக்காரி

பீ

பீடிகை - பீடம்

பு

புணை - தெப்பம்
புடைத்து - அடித்து
புதைத்து - மூடி
புத்தேள் உலகம் - தேவலோகம்
புலைமகன் - நீசன்
புறம்பே - வெளியே

பூ

பூண் - ஆபரணம்
பூந்துகில் - பொலிவுள்ள உடை
பூதசதுக்கம் - பூதம் வாழ்கின்ற நாற்சந்தி

பே

பேணுநர் - காப்பாற்றுகின்றவர்

பொ

பொய்கை - குளம்

போ

போயபிறவி - முன்பிறவி

ம

மடிதல் - இறத்தல்
மண்திணி - மண்நிறைந்த
மந்தி - குரங்கு
மயக்ககுணம் - அறியாமைக் குணம்
மயன் - தேவதச்சன்
மறம் - தீய செயல்
மறுகி - கலங்கி
மன்றம் - மார்
மன்றுபடி - கெடு
மன்னுயிரை - பிறஉயிரை

மா

மாதவர் பள்ளி - புத்தசந்நியாசிகள் வாழும் இடம்

மு

முடைநாற்றம் - மாமிசநாற்றம்
முழவு - மத்தளம்
முறைசெய்தான் - செங்கோல் ஆட்சி புரிந்தான்
முன்றில் - முற்றம்

மெ

மெய்வருத்தம் - உடல் துன்பம்

யா

யாக்கை - உடம்பு

வ

வங்கம் - கப்பல்
வஞ்சம் — மனத்துள்ளிருக்கும் கோபம்
வளம் — செல்வம்
வளவிய - சிறப்புடைய
வனப்பு - அழகு

வா

வாட்டிற்று - துன்பப்படுத்தியது
வாரணசி — காசி
வானம் - மழை
வான் - ஆகாயவெளி
வான் பெரும் - மிகுந்த

வி

விண் - வான்வெளி
விரைபரி - விரைந்து செல்லும் குதிரை
விளித்து - அழைத்து
வீட்டுநெறி - விடுதலைக்கு உரிய வழி

வெ

வெகுண்டான் - கோபித்தான்
வெய்யவன் - சூரியன்

வே

வேய்ங்குழல் — புல்லாங்குழல் இது மூங்கிலாற்செய்யப்பட்டது
வேள்வி - யாகம்

வை

வைசாக சுத்த பூரணை — விசாக நட்சத்திரத்தில் வரும் பௌர்ணமி, இது புத்தர்பிறந்தநாள்